4th March 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கன்னியாகுமரி மாவட்டத்தில்தான் ரப்பர் பயிரிடுவதற்கு லாயக்காக இருக்கிறது என்று இந்தத் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட்டது. வேறு பிராந்தியங்களில் இப்போது விஸ்தரிப்பதாக இல்லை.

DR. (SRIMATHI) SOUNDARAM RAMACHANDRAN: மணி முத்தாறு போகிற வழியிலே, அதாவது நீர்த்தேக்கம் இருக்கிற வழியிலேயும், அதற்கடுத்து மாஞ்சோலை முதலிய இடங்களிலும் ரப்பர், தேக்கு முதலியவை நன்றாக வரும் என்று சொல்லுகிறார்கள். அந்த வட்டாரத்தில் இப்பொழுது ஒரு குறிப்பிட்ட அளவில் இதைப் பயிர் செய்து வருகிறார்கள். இதை விஸ்தரிப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா? இந்த 700 ரூபாய் முதல் வருஷத்திலே ஒரு ஏக்கர் நிலத்தைப் பயிர் செய்வதற்கு செலவழிக்கப்பட்டதா? இதைக் காட்டிலும் குறைந்த செலவில் வேறு இடங்களில் இதைப் பயிரிட சர்க்கார் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்த 700 ரூபாய் முதல் வருஷத்திலே ஏற்பட்ட செலவு. மேற்கொண்டு செலவு குறையுமென்றுதான் எதிர்பார்க்கப்படுகிறது. இப்பொழுதுதான் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. இதைப்பற்றி மேலும் பரிசீலனை செய்த பிறகுதான் வேறு இடங்களுக்கு விஸ்தரிப்பதைப் பற்றி அரசாங்கம் கவனிக்க முடியும்.

*Kundah Project*

* 580 Q.—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the generator in the first stage of Kundah is working to its capacity?

THE HON. SRI V. RAMAIAH: Yes, sir.

SRI A. A. RASHEED: What is the capacity of the generator What is the present production of electricity?

THE HON. SRI V. RAMAIAH: For the first generator and first power house, it is 20,000 KW. With the present generator, both the generators in the First power house are generating electricity. Two generators in the second power house also generate power.

*Electric power supply*

* 581 Q.—SRI M. P. SARATHI: கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்திற்கு எந்தெந்த அண்டை ராஜ்யங்களிலிருந்து எவ்வளவு மின்சாரம் வாங்கப்படுகிறது?

(இ) எந்தெந்த அண்டை ராஜ்யங்களுக்கு எவ்வளவு மின்சாரம் வழங்கப்படுகிறது?

(உ) கேரள ராஜ்யத்திலிருந்து அதிக மின்சாரம் கேட்டு கோரிக்கை வந்ததா?

(எ) அதனுடைய முடிவு என்ன?